| செவ்விதழ் முத்தம் | | |
|---|---|---|
| எண் | பெயர் | |
| 1 | காதல் பூ | |
| 2 | காதல் சிலுவை | |
| 3 | காதல் சிறகை | |
| 4 | காதல் தேவதை | |
| 5 | காதல் வலி | |
| 6 | காதல் வேள்வி | |
| 7 | காதல் வேதம் | |
| 8 | காதல் | |
| 9 | காதல் இராட்சசி | |
| 10 | காதலே என் காதலே | |
| 11 | காதலே சொல் | |
| 12 | காதலும் பொய்யே | |
| 13 | காதலெனுந் தீவு | |
| 14 | காதலில் விழுந்தேன் | |
| 15 | கவிதை சொல் கிளியே | |
| 16 | கவிதைத் தூது | |
| 17 | கவியின் காதல் | |
| 18 | குண்டுமல்லிகை | |
| 19 | மலர்க்கூந்தல் | |
| 20 | மஞ்சள் மோகினி | |
| 21 | மாதொருபாகன் | |
| 22 | மயக்கம் என்ன | |
| 23 | முள்ளும் மலரும் | |
| 24 | முரண்பாடுகள் | |
| 25 | நடையா, இது நடையா? | |

| செவ்விதழ் முத்தம் | | |
|---|---|---|
| எண் | பெயர் | |
| 26 | நடையா இது நாட்டியமா? | |
| 27 | நெஞ்சுக்குள் பெய்யும் பூமழை | |
| 28 | நிலவும் மலரும் | |
| 29 | நினைவுகள் | |
| 30 | பிறந்த நாள் | |
| 31 | பிரியாத வரம் | |
| 32 | பிச்சா பாத்திரம் | |
| 33 | பொன் விலங்கு | |
| 34 | பூக்காரி | |
| 35 | பூந்தேன் | |
| 36 | பிரியமானவளே | |
| 37 | ரோஜா | |
| 38 | சாபம் | |
| 39 | செவ்விதழ் | |
| 40 | தேடும் விழிகள் | |
| 41 | ஊடல் | |
| 42 | வலி | |
| 43 | வள்ளல் | |
| 44 | வான்மதி | |
| 45 | வண்ணக்கோலம் | |
| 46 | யார் இந்தத் தேவதை | |
| 47 | யார், யார் யாரிவள் | |
| 48 | யாரிவள் மோகினி | |
| 49 | யாரிவள் தேவதை | |
| | | |

# காதல் மலரே

---

காதல் மலரே ஏனடி பூக்க மறந்தாய்?
கவிக்குயிலே ஏனடி பாட மறந்தாய்?
உன் இதய வானில் பாடித்திரிந்த வானம்பாடி
இறகொடிந்து வாடுதடி,
உன் காதல் வானில் உலா வந்த
தேன் நிலவு தேய்பிறையாய்க் கரையுதடி

காதல் வானில் தேன் நிலவாய் நீயிருக்க
நாளும் நெஞ்சிலே பூமழை-உன்னைக்
காணாத பொழுதோ வாட்டிடும் தீ மழை

சோடிக் குயிலாய் பாடி அழைக்கின்றேன்
கானக்குயிலே பதில் சொல்
காதல் கிளியாய் கொஞ்சத் துடிக்கின்றேன்
என் அஞ்சுகமே அருகில் வா முத்தம் தா

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-4-2023

# காதல் சிலுவை

ஏனடி பார்வதி என் நெஞ்சை நோகடித்தாய்
மலரான வார்த்தைகள் முள்ளாய் ஆனதும் ஏனோ?
தென்றலாய் தழுவிய பார்வையில்
தீயினைக் கலந்ததும் யாரோ?

நெஞ்சமெல்லாம் வேதனைத் தீ பரவ
நினைவெங்கும் சோகச் சிலந்தி வலை பின்ன
நித்திரையும் போனதடி- உன்னால்
என் நிம்மதியும் போனதடி

நள்ளிரவிலும் விழிகளில் நீர் சொட்டும்
பஞ்சணையும் முட்படுக்கையாய்த் வாட்டும்
கள்ளிருக்கும் வெண்மலர் சூடும் காதலியை
நாவினால் சுட்ட வார்த்தைகள்
அக்கினி அம்புகளாய் நெஞ்சை வருத்தும்.

நெஞ்சமெல்லாம் நிறைந்தவளை நேசப் பூவாய்
மலர்ந்தவளை, வார்த்தைகளால் சுட்ட வேதனை
பட்ட மரத்தீயாய் வாட்டிட-சோகத்தை சுமந்து
இமயமாய் கனக்கும் இளைய மனம்.
காதல் மடி தேடி தேவதாஸாய் அலையும் தினம்.

அன்பைச் சுவைத்த நெஞ்சை ஆறாத்துயர்
ஆலகால நஞ்சாய் கொல்லும்
வஞ்சிமகள் அன்பில்லாத உலகில்
நஞ்சே அமுதாய் தோன்றும்.

பூ நெஞ்சும் காயமானபின்
பொன்விழிகளில் பூத்ததோ நீர்த்திரை
செவ்வாய் மொழிக்கு சோகம்
இட்டதோ ஊமைத் திரை

அன்பினை இழந்த நெஞ்சம்-கயிறறுந்த
காற்றாடியாய் அல்லாடியது
பொன்னான உறவும் மண்ணாக
புண்ணாகிப்போனது ஏழை நெஞ்சு

நீயில்லாத உலகில்
நிலவில்லாய் வானாய் நின்றேன்
காதல் தேனில்லா நிலையில்
காகிதப் பூவாய் ஆனேன்

பக்தி தொங்கவிட்டது நெஞ்சில் சிலுவை
காதல் தொங்கவிட்டதோ பாரச் சிலுவை?
காதல் கூட சிலுவைப் பாதைதானோ?
காதலில்லா வாழ்வு கல்வாரிதானோ?

கலங்கி நின்ற என்னைக் கட்டியணைத்தே
பூங்கொடி என்னில் பூத்துப் படர்ந்தாள்
காதல் சொன்ன இதழ்களில் குமுத வாயால் அமுது
தந்தே, என்தன் கண்ணாளா நீதான் என்றாள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-7-4-2023*

# காதல் சிறகை காற்றினில் விரித்து

---

விலகி விலகிச் சென்றவனை
விண்மீன் வானத்து நிலவாய்-சுந்தரவானில்
உலவித் திரிந்தவனை-உன்
இதயவானில் சிறைவைக்கத் துடித்தாய்

நீலவானில் கானம் பாடித் திரிந்த வானம் பாடியை-உன்
இதயக் கூண்டில் அடைக்கத் தவித்தாய்
உருகி கரைந்து உள்ளம் கரைய காதல் சொல்லி
என் உள்ளத்தில் காதல் தீயை மூட்டி வளர்த்தாய்.

காதல் குயிலாய் நெஞ்சம் கவிபாட-
என் சோடிக் குயிலோ
பறந்து போனது என்னை பிரிந்து?
என் காதலைத் துறந்துபோனது என்னை மறந்து?

காதல் வயப்பட்ட கருங்குயிலோ கூவியழ-
துணைதேடி சோகக்கடலில் மூழ்கியழ-
புள்ளிக்குயிலோ சொல்லாமல் பறந்து போனது
சொந்தத்ததை மறந்துபோனது.

பூபாளம் பாடிய வானம் பாடிக்கு
முகாரியே காதல் கீதமானது-
சுந்தர பௌர்ணமி நிலவுக்கு
கருவானமே சிறையானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# காதல் தேவதை

கண் வழி நுழைந்து, நெஞ்சுக்குள்
முளைத்த காதல் தேவதை
காதலனாய் என்னை உருமாற்றிய
பூங்கவிதை

காதலாகி உன் பெயரைஉச்சரித்தேன்
காவியமாய் என்னுள் விரிந்தாள்
ஒரு பூவாய் என்னைத் தந்தேன்
என் காதல் பூவனமாய் மலர்ந்தாள்

ஒரு விண்மினாய் உன் வானில்
ஒளிரத் தவித்தேன்
என் வானில் நீயோ-என்றும்
ஒளி சிந்தும் பௌர்ணமி நிலவானாய்

சேயாய் உன் மடி சாய நினைத்தேன்
நீயோ எனக்குத் தாயானாய்
என் காதலே என் காதலே
எத்தனை இன்பம் தந்தாய்

இருமனம் கலந்து ஒரு மனமாக
நறுமணம் வீசும் காதல் திருமணமாக
என் வாழ்வில் ஆனந்த நிலைக்க
இறைவன் தந்த இன்பக் கொடை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# காதல் வலி

---

காதலின் வண்ணக் கனவுகளை கலைத்து விட்டு
கண்ணீரைப் பரிசளித்தாய்,- இதயத்தின்
அழகுக் கோலங்களை அழித்துவிட்டு-பூ மனதை
ஆறாத்துயரில் மூழ்கடித்தாய்,

பூவனமாய் மலர்ந்த நெஞ்சில்
சோகப் புயல் வீசும் கொடுமை,
பூந்தென்றல் உலாவந்த சுவாசத்தில்
தகிக்கும் பாலையின் வெம்மை.

சீதையை பிரிந்த ஸ்ரீராமனின் நெஞ்சினிலோ
சோகச் சுனாமியின் தாக்கம்-இராமனைப்
பிரிந்த சீதையின் சேல்விழிகளிளோ
கடலைப் பிரிந்த கயலின் ஏக்கம்

பூபாளம் பாடிய புள்ளிக் குயிலின் கானத்தில்
முகாரியின் ஆலாபனம் -வானில் பறந்த
வானம் பாடியின் நெஞ்சிலோ காதலின் தீராத வலி
கண்களிலோ வற்றாத கங்கை நதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-04-2023

# காதல் வேள்வி

---

கள்ளிருக்கும் மலர் சூடும் மைதிலி
கானகத்தில் ஸ்ரீராமனோடு உலா வரும் ஜானகி
என் பூவனத்தில் கானம் பாடும் சகுந்தலா
என் காதல் வானில் உலாவந்த தேன் நிலா

விழிகளால் செய்த காதல் வேள்வியில்
காதலாகி வீழ்ந்தே ஆகுதியானேன்
புன்னகைப் பூக்களால் கட்டிய பூமாலை சூடியே
சுயம்வரத்தில் வரனுமானேன்

கண்மணியே என் காதல் கிளியே
விண்ணைத் தாண்டி உன்னோடு எழுந்து பறந்திட
இறக்கைகள் தந்தாய், என் பாலை மனதில்
தேன் மழைபொழிந்திட காதல் வரம் தந்தாய்

கண்மணி உன்னோடு வாழும் நொடி
ஒவ்வொன்றும் நூறு வருஷமடி
உன்னைப் பிரிந்த ஒரு கணமும்
என்னைத் தீய்க்கும் எரி நரகமடி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-7-4-2023*

# காதல் வேதம்

---

உன் பெயரை உச்சரித்து என் இதழ்களிலும்
நாணத்தின் சிவப்பு-என் மொழிகளிலும்
கவிதையின் உயிர்ப்பு

கரைதழுவி அலையும் அலைகள்போல்
காதலே உன்னை நித்தம் நினைந்துருகும்
என் நினைவுகள்.

இனிக்கும் உன் பெயரை-துடிக்கும் என் இதயத்தில்
எழுதியதால் தவிக்குதடி என் நெஞ்சு.

நினக்கும்போது இதயம் இனிக்கின்றது
கேட்கும்போது செவிகள் இனிக்கின்றன
சொல்லும்போது இதழ்கள் சிவக்கின்றன
காதலே உன் பெயர் என்ன அதிசயத் தேனா?

உன்னால் என் விழிகளிலோ கண்ணீர்க் குளங்கள்
என் மொழிகளிலோ முகாரியின் அபஸ்ரங்கள் ஏனடி?

கடல் சேரத் துடிக்கும் நதியா காதல்?
கரைசேர துடிக்கும் கடல் அலையா காதல்?
கண்வழி நுழைந்து நெஞ்சினல் விளைந்த
பூவனமா காதல்?

விழிப்பூக்களால் காதலை யாசித்தவனுக்கு
புன்னகைப் பூக்களால் காதலை
அர்ச்சனையாக்கிய தேவதை நீ

காதல் மீன் கொத்தியா நீ?
கண்களால் என் இதயத்தை கொத்தி
காதல் சொல்கின்றாய்

கருவானில் உலாவரும்  ஒரு வெண்ணிலவு
கருவிழிகளாய் உன் மதிமுகத்தில், இரு
நிலவுகளை யார் வைத்தார்? சொல் நிலவே

வானுக்கு ஏது வாயில்கள்?பூந்தேனுக்கு ஏது
காவல்கள்? அலையும் கடலுக்கு ஏது ஓய்வுகள்?
அன்பே என் காதலுக்கு ஏது எல்லைகள்?
காதலுக்கு வானமே எல்லை

காதல் யாத்திரையில் நானும் ஒரு ஹாஜி
காதலாகி உன்னை சுற்றும்போதெல்லாம்
காதலே என் "க.:.பா" நீயடி

மும்தாஜே என் முழு நிலவே நீயே என் காதலி
நீயின்றி வேறு காதல் எனக்கேதடி
தினம் தினம் நான் ஓதும் "கலிமாவும" இதுதானடி
என் நெஞ்சுற்ற காதல் விடாய் தணித்திட
இறைவன் ஈந்த "சம் சம் ஊற்றும்" நீதானடி

என் இதயத்தில் உனக்காய் நான் எடுத்த
பால் காவடியை ஏனடி
முட்காவடியாய் மாற்றினாய்?

நாளும் நான் ஓதும் காயத்திரி மந்திரம் உன் பெயரடி
நாளும் என் காதல் பிணி தீர என் கங்கா ஸ்நானமும்
காதல் கங்கையே உன் காதலடி

உன் காலடி பட்ட இடம்தான் என் "சிவனொளிபாதம்"
உன்னைக் கண்ட இடம்தான் என் "மிகிந்தலை"
நீ காதல் சொன்ன இடம்தான்
நான் "காதல் ஞானம்" பெற்ற "போதிமரம"
காதல் புத்தனாய் உன் காலடி அமர்ந்த
சித்தார்த்தன் நானடி- யசோதரா

ஏதேன் தோட்டத்து ஏவாளாய்
இன்பவனத்து காதல் குயிலாய்
ஆதாம் எனக்கு ஆண்டவன் ஈந்த
அன்பு கொடை நீதானடி

காதலாகி நின்றேன் இதயத்திலோ பூவனம்
சுவாசத்திலோ பூமணம்

காதலின்றிப் பாலை நெஞ்சோடு பரிதவித்த ஏழைக்குப்,
பாலும் தேனும் ஓடும் வாக்களிக்கபட்ட பூமியாய்
காதல் பூமிகா நீயடி

ஏதேன் தோட்டமே எனக்கு ஜெஸ்தமெனியானது
நெஞ்சம் சூடிய காதல் பூவே , நான் சுமக்க
பாரச் சிலுவையானது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-6-4-2023*

# காதல்

---

காதல் தீயே-என்னுள்ளிருக்கும் உனதன் காதல்
நெருப்பு, என் உயிர் மூச்சை எரிக்குதடி
காதல் சோகத்திலும்-கள்ளிருக்கும் மலராய்
உன் முகம் -நெஞ்சில் இனிக்குதடி

இதயம் செய்யும் வேள்வியடி-காதல்
ஓமகுண்டமாய் உள்ளம் எரிய
ஆகுதியாய் அன்பு மழை பொழிய
வேத மந்திரமாய் உன் நாமம் ஒலிக்க
காதல் தேவதையே
என் நெஞ்சத்துக் காதல் வேள்வி
உன் இதயத்தைத் தொடவில்லையா?

காதல் தீயே உன்னால்
என் இதயமும் மெழுகாய் உருகுதடி
கண்ணீர் வெள்ளத்தில் என் காதல் ஓடமும்
உன் இதயக் கரை சேரத் தவிக்குதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# காதல் இராட்சசி

நெற்றிச் சுருளால் நெஞ்சைக் கட்டிப்போட்டு
நீள் விழிகளால் என்னை மயக்கினாள்
முத்துப் பற்களால் மோகத்தை கிளறி
மோகனப் புன்னகையால் இதயத்தை திருடினாள்

கத்தும் கடலைபோல்-நெஞ்சில் காதல் பொங்கியெழ
சித்தம் நினைப்பு செய்கையெல்லாம் சீதையே
என் நெஞ்சத்து செந்தமரையே
ஸ்ரீராமனாய் மனம் உன்னை எண்ணிக் களிக்க
கண்களால் என்னைச் சிறையெடுத்த காதல் இராட்சசி

கோபம் கொண்டபோது மௌனராகம் மீட்டினாய்
ஊடல் கொண்டபோது உவகையில் நீந்தினாய்
கத்தும் கடழேலும் நெஞ்சில் கவலை சொல்ல
கண்களிலோ சோக அருவி பாய
காதலே ஏனடி என்னை அழவைத்தாய்.

சித்தம், நினைப்புச், செய்கையெல்லாம் அவளாக
காதல் பித்தனாய் நான் அலைய
என்னை தேவதாஸாய் மாற்றிய பார்வதி

நெஞ்சுற்ற காதலால் என்றும்
நேசம் மறவாத கண்ணகி
காதலால் எனை ஆளும் தேவகி
என் நெஞ்சில் ஆடும் காதல் நர்த்தகி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-7-4-2023

# காதலே என் காதலே

என் முன்னே நீயிருந்தும், என் கண்கள் சொல்லும் காதலை
அறிந்திருந்தும், அறியாததுபோல் உன் பாவம்
என் நெஞ்சிலே கங்கையாய்ச் சோகம்
பூ நெஞ்சைக் கல்லாக்கி-ஏனடி
என் கனி நெஞ்சைப் புண்ணாக்கினாய்?

மதுமலர் மொய்க்கும் பூந்தும்பிபோல்-மாது உன்
பூ முகம் என்னை மொய்க்கும்போதெல்லாம்
என் இதயத்தில் ஆனந்தப் புல்லரிப்பு.
நெஞ்சில் கவிதையின் பெருக்கெடுப்பு

புன்னகை இல்லாப் உன் பூ முகத்தை காணும்போதெல்லாம்
காகிதப்பூக்களை மொய்ப்பதுபோல் என் நெஞ்சிலோ பெரும் தவிப்பு
வண்ண மலராய் நீ பூத்தாடும் போதெல்லாம்
பூமழையில் நீராடும் ஆனந்தக் களிப்பு

உன்னைச் சுற்றும் காதல் தேன் தும்பி-
என் காதல் ரீங்காரம் உனக்குக் கேட்கவில்லையா?
பாடும் பூங்கவிதையை நீ சூடவில்லையா?
உன் இதயக்கோயிலில்-என் விழிகள் எழுதும் -
காதல் அழகோவியத்தை கயலே நீ காணவில்லையா?

வான்போல் நீ தூரமாயிருந்தாலும்
வான் மழைபோல் என்மேல் நாளும் பொழியும்
அன்பு மழை உன் புன்னகை-கடல்போல்
உன் நெஞ்சம் ஆழமாயிருந்தாலும்-கரைதழுவும்
அலைகள்போல் என்னைத் தொட்டு தழுவும்
உன் பார்வைகள்-காதல் தித்திப்புக்கள்

***காதலே என் காதலே***
***என்னை என்ன செய்யப் போகிறாய்?***
என் காதல் பூவே-என் கவிதை நீயடி
உன் காதல் நானடி.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# காதலே சொல்

நெஞ்சே நெஞ்சே நேசிப்பாயா என்னை?
உனைப் பிரிந்த நெஞ்சம் நஞ்சுண்டதுபோல் வாட
நினைவிலே மூண்ட சோகம்-இதயத்தில் நரகத்தீயை மூட்ட
கெஞ்சியே காதலை யாசிக்கின்றான்
மும்தாஜே- உன் ஷாஜகான்

அன்பே ஏன் மறந்தாய் என்னை? சோகமுள்ளைச்
சூடிய இதயம் வாடிப் பூங்குயிலாய் கரைய-
மலைத் தேனாய் இனித்த மனம் வேம்பாய்க் கசக்க-காதலே
ஏன் அறைந்தாய் -என்னைச் சோகச் சிலுவையில் ?

பாடிகரைந்த பூங்குயிலும் - பதிலின்றி ஊமையானது-
ஆடிகளைத்த வண்ணமயிலும் -
துணையின்றி ஊனமானது

காதல் அமுதை யாசித்தவனுக்கு-
ஆலகால விஷத்தைக் கொடுத்தார்
காதலை நேசித்தவனை
“தாஜ்மஹாலில்” சிறை வைத்தார்

அழகு நிலவோ-அமாவாசையிரவில் சிறையிருக்க-
அல்லிமலரோ-வற்றிய குளத்தில் வாடிநிற்க-
காதல் உறவு தந்தவளே என்னை
கண்ணீர்ச் சுழலில் தவிக்க விட்ட அவலம்

நிலவே மலராதே, காதல் நினைவைத் தூண்டாதே
இரவே விடியாதே-என் இன்பக்கனவை கலையாதே-
காதல் உறவே பிரியாதே-என் உயிரைப் பறிக்காதே
ஏங்கி மனம் எழுதும் கவிதை என்னவளைச் சேராதோ
என் துயர்தான் தீராதோ?

கண்ணீரால் எழுதும் என் கவிதையை-காற்றே
எடுத்துச் சென்று என் காதலியிடம் சொல்
என்னவளைப் பிரிந்து வாடும் கொடுந் துயர்
எரி நரகம் என அவளிடம் கூறு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-04-2023*

# காதலும் பொய்யே

---

கண்களால் நெஞ்சுக்குள் காதல் தீயை மூட்டியவள்,
கடைக்கண் பார்வையால் காமன் கணையை
நெஞ்சில் சொருகியவள், காளை மனம் மயங்க
காதல் படைகலம் பூண்ட அழகுத் தேவதையாள்

கனவாய் விரிந்து கனிமுகம்காட்டி காதல் சுரத்தால் வாட்டுபவள்,
புன்னகையால் நெஞ்சுக்குள் பூமழை பொழிபவள்,
பொன்நகையாய் என்னையே தன் காதல் நெஞ்சில் சூடியவள்,
என்னை மறந்ததுமேனோ? மௌனம் காப்பதுமேனோ?

கல்லாகிப்போனாதோ-உன் பூ நெஞ்சம்
-இங்கே கல்லாறாய் வரண்டதே
காளையின் உள்ளம்.

மலராய் இதயம் சூடிய காதல்-மாலை வருமுன்
முள்ளாய் வருத்துவதுமேனோ?-கனாக் கானும்
காலத்தில் இதயங்கள் எழுதிய காதல் ஓவியம்-
ஒன்றாய்த் தேன் நிலாக் காணுமுன்
வண்ணம் கலைந்ததுமேனோ?

கன்னியரே உங்கள் காதல் கூட மாயைதானோ?
காதலரை ஏமாற்றும் கானல் நீரோ?
காதலும் பொய்யே! கன்னியர்
காதல் மொழிகளும் பொய்யே!

கடைகண் பார்வையும் பொய்யே!
கனியிதழ் புன்னகையும் பொய்யே!
பொய்யோ? புதைமணலோ காதல் ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# காதலெனும் தீவினிலே

---

கண்களால் நீ சொன்ன
காதல் மொழியெல்லாம் பொய்யா?
கவிதையாய் நீ உதிர்த்த-புன்னகைப்
பூவெல்லாம் காகிதப் பூக்கள்தானா?

பார்க்கத் தவித்துப் பார்த்ததுவும்
பனியாய் உருகி நதியாய் ஓடி , காதல்
கடலில் கலந்து களித்ததுவும் கனவானதே

காதல் கிளிகளாய்க் கதைபேசி மகிழ்ந்ததுவம்
காதலாகிக் கசிந்து கரைந்து
குயில்களாய் கவிதை பாடி மகிழ்ந்ததுவும்
பொய்யாய் பழங்கதையாய் போனதே?

வானம் பாடிகளும்-சோடி மைனாக்களும்
நாம் பாடித்திரிந்த காலத்தையும்-
பழகிக் கழித்த நாட்களையும் சொல்லிட
நெஞ்சில் சோக கங்கை பொங்குதடி

காதல் தீவே காலமெல்லாம்-உன் இதயத்தில்
ஆயுள் கைதியாய் வாழ விரும்பினேன்
ஏனடி நீ என்னை  கண்ணீர்த் தீவுக்கு
நாடு கடத்தினாய்?

வான் நிலவும், வண்ணப் பூ இனமும்
என்னை வாட்டிட-தேன்மலரே
காதல் தேனின்றி உன் பூந்தும்மி வாடுதடி
தேய்பிறையாய் உன் காதல் நிலா தேயுதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# காதலில் விழுந்தேன்

---

விண்ணில் உலா வந்த மூன்றாம் பிறையும்
வண்ணமகள் பேரழகில் மயங்கி நுதலானது
பூவனத்தில் தவமிருந்த தேன் மலர்களும்-
கார்குழலி சூட வண்ண மலரானது

பொய்கையில் விளையாடிய கயல்களும்-
மையெழுதிய நீள்விழிகளாய் மாறிட
கொவ்வையும்- தேன்மொழியாள் செவ்வாயாய் மாறிட
அழகொன்று இங்கே அன்ன நடை பயின்றது

சினுங்கிடும் சின்ன இடையில் நூபுரமும்-
குலுங்கிடும் கால்கொலுசும்-என்னை
“வா”வென்றே அழைத்திட,
பொன்மகள் பேரழகில் என் மனமும் மயங்கி
காதலில் விழுந்ததே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# கவிதை சொல் பூங்குயிலே

ஒரு கவிதை சொல்லக் கடலை கேட்டேன்
அலைகரங்கள் எழுதிய ஆயிரம்
புதுக்கவிதைகள் கரையில் கண்டேன்

ஒரு கவிதை சொல்ல நிலவை கேட்டேன்
வளர்ந்தும் தேய்ந்தும் -தன் வாழ்வின் கவிதையை
வானில் எழுதியது-வண்ணநிலவு

ஒரு கவிதை சொல்லக் காற்றைக் கேட்டேன்
தென்றலாய் புயலாய் சிரித்தும் சீறியும்
காற்று சொன்னது கவிதை

ஒரு கவிதை சொல்ல நெருப்பைக் கேட்டேன்
எரிந்தும், அணைந்தும் எல்லாம் தன்மயமாகிட
கவிதை சொன்னது நெருப்பு

ஒரு கவிதை சொல்லப் பூக்களைக் கேட்டேன்
வண்ண இதழ்கள் விரிய, வாசமணம் பரவ
புன்னகையால் சொல்லியது புதுக் கவிதை

ஒரு கவிதை சொல்லப் பூங்குயிலைக் கேட்டேன்
பாடிப் பரவசமாகி பண்ணால் கவிதை சொன்னது
காதல் பூங்குயில்

ஒரு கவிதை சொல்லப் புல்லைக் கேட்டேன்
தூங்கும் பனித்துளியைத் தாங்கிய புல்லோ
தூளியில் உறங்கும் பனித்துளிக்காய்
தாலாட்டுப் பாடியது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-04-2023*

# கவிதைத் தூது

---

கவிதைத் தூதனுப்பிய ஏழைக் கவிஞனுக்கு
கண்களாலாயினும்-காதல் சொல்வாயா பெண்ணே?
உன் இதய வாசலில் காதல் தவமிருக்கும் தேவி பக்தனுக்கு-
ஒரு புன்னகையால் ஏனும் காதல் பூச்சொரிவாயா-
என்தன் காதல் தேவதையே?

மோனத்தவம் பூண்ட கானக்குயிலால் சோடிக்குயிலும்
ஊமைக்குயிலானது, அஞ்ஞாதவாசம் போன
வெண்ணிலவால், காதல் வானம் -தேவி பக்தனுக்கு
காரிருளில் மூழ்கி அமாவாசையானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# கவியின் காதல்

---

கதிர் பட்டதும் கண் மலரும் மொட்டுப்போல்
உன் விழி தொட்டதும் மலர்ந்ததடி
காதலால் கவி நெஞ்சு

கலாபமயிலாய் நெஞ்சம் தோகை விரித்தாட
இதயம் காதலின் வண்ணக்கோலங்கள் போட
புது வசந்தம் வந்ததென்று பூத்ததடி இளநெஞ்சு

காதலாகிக் கசிந்து நின்றே கன்னி மயிலே
உன்னைக் காவியமாக்கினேன்-ஏனடி
பொற்சிலையே, கற்சிலையாய் நின்று
கவி நெஞ்சைக் காயமாக்குகின்றாய்?

என் கவிதைக்குள் காதலாய் நிற்பதும் நீயடி
என் கவிதைக்குள் சோகமாய் ஒலிப்பதும்
உன்னால் வந்த வேதனையடி

காணத் தவித்து கண்ணீர்ப் பூச்சொரியும்
என் செவ்விழிகள்-பேசத் தவித்து
மோனத்தவமியற்றும்-என் மொழிகள்
காதலே இன்னுமா உன் இதயத்தை தொடவில்லை?

கண் பார்த்து நெஞ்செழுதிய காதல் பூபாளம்
கண்ணீர் சிந்திக் கவி பாட முகாரியானது
வான் உலவிய என் தேன் நிலவும் முகம் மறைக்க
என் வானம் அமாவாசை என்றானது

கல்லா நீ என் அகலிகையே-செவ்வாயால்
காதல் சொல்வாய் நீ என் மைதிலியே
உன்தன் ஸ்ரீராமன் நானடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-04-2023*

# குண்டு மல்லிகை

---

கள்ளிருக்கும் மல்லிகைச்சரம் கார் குழலில் பூத்தாட
இடைதொட்டு இரட்டைப் பின்னல் நடையோடு நாட்டியமாட
கண்ட மனதில் மடையுடைத்த வெள்ளமாய்க் காதல்
பூவாய் என்னைச் சூடி பூத்த நாணத்தில் நறுமணம்
இரு மனம் கலந்த வாழ்வோ காதல் திருமணம்

# முல்லை

---

அந்திவானச் சிவப்பை
அள்ளிப் பூசிய கன்னங்களில் நாணம்
சிந்து பாடும் புள்ளிக் குயிலாய்
மொழியிலே கானம்

மையெழுதிய விழிகளோ யௌவனம்
பூ முகத்திலோ குறுநகையின் நர்த்தனம்
சுந்தரி மேனியிலோ வாசச் சந்தனம்
கார் குழலிலோ மல்லிகையின் பூங்காவனம்

இந்திரனும் சந்திரனும் நாளும்
காதல் தவமிருக்கும் இவள் சந்நிதி
காதலோ சங்கநிதி, தவமின்றி நான்
பெற்ற கன்னியோ குபேரநிதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# மலர்க் கூந்தல்

---

கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் கொடி இடையாள்
துடி நடையில்- என் உள்ளிருக்கும் பூமனமும்
புள்ளிக் குயிலாய் கவிபாடும்-தோகையாய் ஆடி
புந்தோப்பாய் தென்றலில் பூ மணம் வீசும்

கள்ளிருக்கும் மலர் எதற்கு
காதல் தேன்மலராய் நானிருக்க
கிள்ளை மொழி பேசும் கிளி எதற்கு
காதற் பைங்கிளியே என் நெஞ்சில் நீயிருக்க.

எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி
காதல் நெஞ்சு புண்ணாணதடி
பெண்மானே உன்னோடு கூடிக் களித்த காலம்
கனவாய்ப் பழங்கதையாய்ப் போனதடி

கள்வடியும் பூவும் முள்ளானதடி-பைங்கிளியே
காதல் கதைபேசிய வெண்மணலும் பாலையானதடி-
மலர்ந்த காதலும் கருகிடுமோ அஞ்சும் நெஞ்சம்
அஞ்சுகமே, ஒற்றைக்குயிலாய் கரையுதடி

வெண்ணிலவும் வாட்டுதடி-வீசு தென்றலும் வருத்துதடி
கள்ளிருக்கும் மலரெல்லாம்-உன் கார்கூந்தலை நினைவூட்ட
கங்கையை விழியில் வைத்து, காங்கையை நெஞ்சில் வைத்து
காதல் இதயம், காதல் அஞ்சுகமே துடிக்குதடி

கள்ளிருக்கும் மலர்க்கூந்தல் ஜானகியை
மனச்சிறையில் கவர்ந்த காதல்
உள்ளிருந்து வருந்ததடி, உன் நினைவால்
இதயம் ஒற்றைக் குயிலாய்க் கரையுதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# மஞ்சள் மோகினி

---

மஞ்சள் சுடிதாரில் வந்த மோகினியோ?, மனதைக் கொள்ளை
கொண்ட காமினியோ-நெஞ்சில் காதல் மலர, கனவிலும்
வண்ண நிலா ஒளிர, முத்துப்பல் ஒளிர முறுவலித்த மங்கை
என்னைக் காதலில் வீழ்த்திய தேவ கங்கை

புன்னகைப் பூச்சொரியும் மதி வதனம்
பூமணமாய் அவள் பொன் மேனி வாசம்
பூந்தேனாய் அவள் நேசம்

கண்களால் என்னைக் கொய்து-காதல்
பூவாய் என்னை-நெஞ்சில் சூடினாள்
கவிதை பூக்களால் பூஜிக்க
காதல் தேவதையாய் நெஞ்சில் குடியேறினாள்

கதை பேசி, காதல் அஞ்சுகங்களாய் கொஞ்சி மகிழ
நெஞ்சமெங்கும் காதல் தேன் சுரக்க, சுவாசத்திலும்
காதல் மணம் வீச, காதலாகிப் போனேனடி கண்ணே
நான், காணாமல் போனேனடி காதல் பெண்ணே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# மாதொரு பாகன்

---

நிலவும் மறையும்-அமாவாசையிரவில்,
வான் நீலமும் மாறும் அந்திப்பொழுதில்,
அலையும் ஓயும் ஆழ்கடலில்

நேசமே, என் நெஞ்சுற்ற காதல், ஒரு போதும்
ஓயாது , உன்னைச் சேரும்
நாள் வரை மாறாது, மறையாது

கடலாய் நீயிருந்தால்-நித்தம்
நீ தழுவும் கரையாய் நானிருப்பேன்
நிலவாய் நீயிருந்தால்-நீ
உலவும் கருவானாய் நானிருப்பேன்

மலராய் நீயிருந்தால், மதுவும் மணமுமாய்
நானிருப்பேன், மாதே உயிராய் நீயிருந்தால்
என் உடலில் ஒரு பாதி நீயென்றே
மாதொருபாகனாய் நானிருப்பேன்

சிவசக்தியாய் நாமிருப்போம்
அன்பே சிவம் என்று
ஆனந்தமாய் வாழ்ந்திருப்போம்.

அன்னை உறவு தாய் ஈந்தது- தந்தை உறவு பிதா
தந்தது,  காதல் உறவு கண்ணே நீ கொடுத்தது
என்னைக் கவிஞனாக்கி -கண்ணீரில்-
அலையவிட்டதோ, காதலே உன் பிரிவு.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# மயக்கம் என்ன ?

இடை கடந்து நடையோடு சதிராடும் மலர்க்கூந்தலும்
செவ்விதழ் உதிர்க்கும் சின்ன முறுவலும், பொன்மேனிப்
பூ வாசமும் என்னைக் காதலில் வீழ்த்திட, என் காதலுக்கு
விடையென்ன? விழிகளால் வினவிய தேன் மொழியாள்

கயல்களும் காதல் சொல்ல-காதல் தென்றலில்
காற்றாடிபோல் ஆடிய நெஞ்சம் , கார்கூந்தல்
மலராய், என்னை உன் நெஞ்சில் சூடிகொள் என
கன்னியை வேண்டிய இளநெஞ்சம்

கண் பார்க்க, நாணி மண் பார்த்த கோதை
விண் பார்க்க என்னைப் பார்த்த காதல் கீதை
கண் வழியே காதல் சொன் சீதை
அண்ணலும் நோக்க, அவளும் நோக்க
மலர்ந்த காதலோ கம்பனும் பாடாத கவிதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# முள்ளும் மலரும்

---

துளியாய் விழும் மழை
அலை வீசும் கடலில் கலந்தபோது
துளியே கடலான அற்புதம்-காதலோ
ஆனந்த ஐக்கியம்

கண்வழி நுழைந்து நெஞ்சினில் காதலை எழுதிய
பொற்சித்திரமே-பாலை நெஞ்சிலும் உன்னால்
பருவமழை-சோடிக் குயிலே காதல் காயத்திற்கும்
அருமருந்தாய் உன்தன் கானமழை

என் நெஞ்சம் தேடிய பொன்மானே
என் நினைவெல்லாம் நீதானே-உன்னால் இன்று
என் கண்ணீரிலும் காதல் வானவில்
என் கவிதைகளிலும் பூபாளம் பாடும் புள்ளிக்குயில்

கொஞ்சி மகிழ்ந்த அஞ்சுகங்கள் வாழ்வை
நஞ்சாக்கியதோ ஒருவன் நட்பு,
பொய்யாய் வந்தது மெய்யைப் பிரித்திட
ஆறாத்துயரானது என் காதல் வாழ்வு.

அன்பே-நீயின்றி நிலவில்லா வானானேன்
உன்னை பிரிந்து தரையில் விழுந்த மீனானேன்
கண்ணீரிலும் அணையாத காதல் தீ நெஞ்சை எரிக்க
கானம் மறந்த புள்ளிக் குயிலாய் கேவும் நெஞ்சம்

வண்ண மலர்களும், வான் நிலவும் உன் நினைவைக் கூட்ட
தொட்டுத் தழுவும் தென்றலோ உன் ஸ்பரிசமாய் என்னை வாட்ட
சூடத் தவித்த மலரும் வாடிப்போனது
சூடிக் கொடுத்த மாலையும் புழுதியில் வீழ்ந்தது

கண்களிலோ கங்கை, நெஞ்சினிலோ
காங்கையாய் நாளும் என் வாழ்வு
காதலே நீ போனபின்-கணந்தோறும்
மனதில் சாவு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-4-2023

# முரண்பாடு

---

நான் ‘‘நானாக’’ இருப்பதையும்
நீ ‘‘நீயாக’’ இருப்பதையும்
நம் மனங்கள் ஏனோ ஏற்கவில்லை
நம் அன்பு ஆக்கிரமிப்பானபோது
நம் நட்பில் உரசல்கள்-
நெஞ்சில் காயங்கள்

அகங்காரத்தின் உராய்வுகள்
காதல் நெஞ்சை காயப்படுத்தியபோது
நெஞ்சில் தேவதாஸின் துயரங்கள்
பார்வதியின் கண்ணீர் அருவிகள்

என்னை இழந்தேன்-நான் இல்லை
இருப்பது நீ மட்டும்தான் என்று
அறிந்தே பார்வதி
மீண்டும் உன் இதயக் கதவை தட்டினேன்

யாரேன்று நீ கேட்டாய்
நீயே என்று பதிலுரைத்தேன்
இதயக்கதவு மெல்லத் திறந்திட
எங்கும் இன்பமயம்

இருவரல்ல ஒருவரென்ற அனுபூதியில்
அர்த்தநாரிஸ்வரத் தத்ததுவம்
அதுவே உண்மைக் காதல்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-04-2023

# நடையா, இது நடையா?

---

அங்கம் சூடிய வண்ண ஆடையில் வஞ்சிகொடியோ தங்கச் சிலை
வங்கக் கடலில் மூண்ட புயலாய்-நெஞ்சில்
காதல் மையம் கொள்ள-காளை நெஞ்சைக் கொள்ளையிடக்
கன்னி மயிலாள் விழிகள் தூவும் காதல் மழையோ வலை

இடைதொட்டு நடையோடு சதிராடும் மலர்க் கூந்தல்-
இங்கும் அங்கும் இளமனதை அலைக்கழிக்க
பாவை செல்லும் பாதை நீளாதோ என நெஞ்சம் துடிக்க
பார்த்து இரசிக்க-அபிநய சுந்தரி நடையிலும்,
கொடி இடையிலும் அரங்கேறும் பரத நாட்டியம்

பொங்கியெழும் உணர்வுகள் உயிரை வாட்ட,
காதல் கிளியோ? கருவான் உலவும் பௌர்ணமி நிலவோ
கண்முன் நடைபயில்வது, நெஞ்சம் வியக்க
பொங்கும் பூம்புனலாய் என் நெஞ்சம்

வானம் பாடியாய் நெஞ்சம் கவிபாட
கன்னி மயிலைக் கடந்து சென்றேன்
காதல் மாயை என்றே
மனதைக் கடந்து மகிழ்ந்து நடந்தேன்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# நடையா நாட்டியமா ?

---

இடை கடந்து இடம் வலம் என நடையோடு
நடனமாடும் கார் கூந்தலோ காலாற் படை
மலர்முகம் நின்று நெஞ்சை ஊடுவி
என்னைத் தாக்கும் விழிகளோ வேற்படை

மல்லிகையோ?, முல்லையோ-மனம் மையலுற-
சுவாசத்தை நிறைத்த பூமேனி சிந்தும் நறுமணம்,
பூமழையோ? தேன் மழையோ இதயம் பூரிக்க
என்னைத் தழுவும் புன்னகையில் காதல் மணம்

நெஞ்சம் புல்லரிக்க நடந்து வந்த பொற்கொடி
தேவதையோ? திருமகளோ?
காதல் கடலில் மூழ்கி மனம் தத்தளிக்க
காதல் வரம் கொடுத்த தெய்வமகளோ காமன் மகள்

பூவே உன் நெஞ்சுக்குள் பூந்தேனாய் நானினிக்க
வரம் கொடு, காதல் நிலவே, என் அமாவாசை
இரவுக்கு புது வரவாய் ஒளி கொடு-தவமின்றி
காதல் வரம் பெற்ற பக்தன் நான்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-04-2023

# நெஞ்சுக்குள் பெய்யும் பூமழை

நாளும் நான் காணும் பௌர்ணமியும் நீதானடி-நாளும்
என் நெஞ்சுக்குள் பெய்யும் பூமழையும் உன் காதல்தானடி
உன் பூவிழிகளிலோ என் காதல் பூவனம்
உன் செவ்வாயிதழ்களிலோ என் காதல் தேனமுதம்

முத்தப்பூக்கள் சொரியும் செவ்வாயிதழ்களை-
கொஞ்சும் கிளிபோல் கொத்திப் பார்க்கத் துடிக்கும்
காதல் நெஞ்சம்-செக்கச் சிவந்த கன்னங்களை
கவ்விக் கடிக்க காதலால் ஏங்கும் இளநெஞ்சம்

வஞ்சிகொடியே என் நெஞ்சுக்குள் மணக்கும்
வாசப் பூவும் நீதானா? என் நினைவுக்குள்
இனிக்கும் காதல் தேனும் நீதானா?

என் கண்ணுக்குள் மலர்ந்த வண்ணக் கனவும் நீதானா?
என் நெஞ்சுக்குள் உலாவும் காதல் நிலவும் நீதானா?
காதல் வானாய் என்னுள் விரிந்து கவிதைத் தேனை
எனக்குள் பொழியும் காதல் தேன் மழையே
கடவுள் தந்த அன்பு கொடை நீயடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# நிலவும், மலரும்

---

நடையோடு நடனமாடும் கார்கூந்தல்
வண்ணமலர் சூடி மகிழ, கூத்தாடும் குண்டலங்கள்
புது மலர்களாய்ப் பூத்தாட, நீராடும் கயல்களோ
இவள் நீல நயனங்களை கண்டு மயங்கிய நெஞ்சம்

மதிநுதலில் சிறு நிலவாய் மையிட்ட
பொட்டில் வான் நிலவு மயங்க, செந்தேனூறும்
செவ்வாயிதழ்கள் புன்னகைப் பூச்சொரிய
நிலவோ? மலரோ? மங்கை என மயங்கிய மனம்

மயக்கும் மல்லிகை வாசத்தில் மனம் கிறங்க
மைதிலியோ, சகுந்தலையோ மனம் வியக்க, கம்பனும்,
காளிதாஸனுமாய் நங்கையை மனம் கவிதையில் வடிக்க
வாழ்க்கைத் துணையாய் வந்த அழகு நங்கை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-04-2023

# நினைவுகள்

-----------------------------------------

என்னைக் கடந்து-நீ செல்லும்போதெல்லாம்
துடிக்கும் இதயத்தில் பூபாளம்
மணக்கும் என் சுவாசத்தில் உன் பூவாசம்
என் உள்ளமோ உந்தன் காதல் தேசம்

அலையும் கடல் அலைகள்போல் மண்ணிலும்,
உலவும் வான் மேகங்கள்போல் விண்ணிலும்,
உயிரே உன்னைத் தேடி தவிக்கும் என் இதயம்.

பால் நிலவோ-வான்வெளியில்-பூவனமோ
வெகுதொலைவில்-தேன் நிலவோ மனவெளியில்
என் தேவதை, நீயோ என்றும் என் நினைவில்

மழை மேகமாய் உருகிக் கரைந்தேன், மண்ணாய் நெகிழ்ந்தே
உன்னைத் தந்தாய், சொல்லாமலே நெஞ்சுக்குள் வந்து-
கொல்லாமலே, என் நெஞ்சை கொத்திய காதல் மரங்கொத்தி
உன்னால் வாழ்வில் கொள்ளை இன்பமடி

கண் பார்த்து நெஞ்செழுதிய காதல் காவியமே
நான் பார்க்க, மண் பார்த்து நீ நாணிய கோலம்
என் மனதுக்குள் இன்றும் மறையாத ஓவியமடி
அழியாத காவியமடி

என் நெஞ்சைத் தழுவிச் செல்லும் பூந்தென்றல்
நீதானா? பூவாய் என்னைச் சூடிக்கொள்ளும்
காதல் தேவதையும் இவள்தானா?

யாரிவள் எங்கு தொட்டாலும் இனிக்கும் தேனைப்போல்
காணும்போதெல்லாம் கண்வழி விழுந்து நெஞ்சுக்குள்
இனிக்கின்றாள்-முழு நிலாவைப்போல்
என் கனவிலும் தேன் நிலவாய் ஒளிர்கின்றாள்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-04-2023*

# பிறந்த நாள்

---

என் பிறந்த நாளின்று, உன் ஒருத்தியின் வாழ்த்துக்காய்
தொலைபேசி அருகே தவமாய்த் தவமிருந்தேன்-வந்த
வாழ்த்துக்களும், பூங்கொத்துக்களும் வாடிப்போயின
நீ மட்டும் வாழ்த்தவில்லை, பூவான மனம் முள்ளானதடி
தீ சுட்ட மலராய் நெஞ்சம் வாடுதடி

ஏனடி என் மனசுக்குள் சொல்லாமல் வந்தாய்?, பூ நெஞ்சுக்கு
காதலும் தந்தாய் பூவாய் மலர்ந்த நெஞ்சு புண்ணாய்ப்
போனதடி, பௌர்ணமி நிலவாய் பூத்த மனசு
அமாவாசை இரவுக்குள் மூழ்குதடி

நெஞ்சமெல்லாம் நீயாகி-நினைவெல்லாம்
உனதாகிக் காதலால் உருகி நின்றேன்-ஏனடி
கண்ணம்மா கண்ணீரில் மூழ்கவிட்டாய்

காதல் கொண்ட மனமோ பூத்த பூங்காவனம்
வாழ்த்த மறந்த தினத்தில்-என் மனமோ
தணலாய் கொதிக்கும் பாலை வனம்

தெரியாத சொர்க்கத்தை காதல் தேவதையே
வரமாய்த் ஈந்தாய்-இன்றோ நரகத்தின் சுவையை
நான் சுவைக்க வாழ்த்த மறந்தாய்?

என்னை ஏன் மறந்தாய் என் அன்பே
நிலவில்லாத வானாய் நெஞ்சு வாடிட
காயமான நெஞ்சு ஒற்றைக் குயிலாய் கேவிட
காதலே ஏன் மறந்தாய்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# பிரியாத வரம்

---

என் பிரிய நெஞ்சுக்குள் என்றும் பிரியமாய் வாழ
பிரியமானவளிடம்- பிரியாத இடம்
பிரியமாய்க் கேட்டேன்

மலரைப் பிரியாத தேனாய்-வானைப் பிரியாத நிலவாய்
குழலைப் பிரியாத இசையாய்
குளத்தைப் பிரியாத செந்தாமரையாய்
உன் நெஞ்சில் வாழ இடம் தருவாயா?

சுருதி பிசகாத இசையாய்
வண்ணம் கலையாத ஓவியமாய்
உன் நெஞ்சில் நானும்-என் நெஞ்சில் நீயும்
செம்புலப் பெயர் நீர்போல்-அன்புடை நெஞ்சம்தான்
கலந்து இன்புற்று வாழ காதல் வரம் கேட்டேன்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-5-04-2023

# பிட்சா பாத்திரம்

---

ஓட்டைப் பண்டம் என் பிட்சா பாத்திரம்
உருகிக் கரைந்தே
ஆயிரம் வாசல் இதயங்களிடம்
அன்புப் பிச்சை கேட்டது

நட்பு, பாசம், காதல் என்றே
பல்வகை உறவும் நெஞ்சைப் பகிர்ந்தும்
ஓட்டைப் பாத்திரம் நிரம்பவில்லை
உணர்ச்சியின் புலம்பல் குறையவில்லை

மானிட அன்பினால் நிரம்பாத இதயம்
மறுபடியும் மறுபடியும்
அன்பிற்காய் ஏங்கித் தவித்தே
அழுது களைத்தது:

உடைந்து நொருங்கிய இதயம் இறைவனைச் சரணடைய
ஓட்டைப் பண்டம் அன்புக் கடலில் மூழ்கிப்போயிட
ஓம் சாந்தி- ஓம் சாந்தி- ஓம் சாந்தி
என்றே நெஞ்சை அமைதி ஆட்கொள்ள
என்னே என் ஆனந்தம்! எங்கும் சச்சித் ஆனந்தம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# பொன் விலங்கு

---

பூக்கள் நிறைந்த புல்வெளியில்-பூவையோ
குறிஞ்சி மலராய் மலர்ந்தாள்
பாக்கள் மலரும் கவிஞன் மனதில்-கவிதா
புதுக் கவிதையாய் விரிந்தாள்

புன்னகைப் பூக்களில் காதல் தேனைக் கலந்தவள்
பொன் நகையாய் எனைச் சூடியவள்
பொன் விலங்கானாள்-மனதிற்கு பூவிலங்கானாள்.

கயல்கள் சொல்லும் மொழிகள் காமத்துப்பாலாய் இனிக்க
இதழ்கள் பூக்கும் புன்னகை காதல் தேனைத் தெளிக்க-நூலிடை
தொட்டாடும் பூஞ்சடை மலர் தூவி வா என்றது
ஒரு பூமாலையாய் என்னைச் சூடு என்றது

காம பாணம் என்னைக்-காதல் பானமாய் அருந்து
காமன் விருந்து -காதலுக்கு அரு மருந்து
கன்னி மனம் காதல் சொன்னது
என் மனமோ விண்ணில் பறந்தது

இட்ட அடியிலும் எடுத்த அடியிலும் கொலுசும்
மேகலையும், காதல் இசைமீட்க-கன்னச் சிவப்பினில்
நாணம் எழுதிய கவிதை என்னை மயக்க
வண்ணச் சேலைக்குள் மின்னி மறைந்த நூலிடை
மின்னலாய் நெஞ்சைத் தாக்க
புள்ளிமானாய் துள்ளித் திரிந்த ஏழை நெஞ்சம்
காமன் கணைபட்டு புண்ணாணதடி
கனவிலும் உன்னை எண்ணிக் காதலால் வாடுதடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# பூக்காரி-கொடுமை

---

பூ விற்கும் பூவையே வாடிய பூவாக நின்றாள்
தான் விற்கும் வாசப் பூக்களைச் சூட வழியின்றி,
இளவயது விதவை அவள்
எரிநரகான இந்துக் கலாச்சாரத்தில்
உருவழியும் பூவை அவள்

அறுந்த மாங்கல்யத்தோடு-அழிந்த
மஞ்சள், குங்குமம்
உதிர்ந்த மல்லிகைச் சரம்

கைம்மை ஆயுள் தண்டனையான கொடுமை
வறுமை ஆட்டிப் படைக்க-பெண்மைக்கு நீதி
இன்றும் இந்துச் சமுதாயத்தில் மாறாத அநீதி

பாண்டவரில் ஒருவர் மாண்டால்
பாஞ்சாலியும் விதவையோ?-
சாஸ்திரம் அறிந்த சகாதேவன்
கிருஷ்ணனிடம் கேட்ட வரம்-மாதவள்
மாங்கல்யத்தைக் காக்கவோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# பூந்தேன்

---

கள்ளிருக்கும் செவ்விதழ்கள்தான்
பூந்தேனாய் இனிக்கும்
கார்கூந்தல் வாசமும்தான்
வண்ணப்பூக்களைப் பழிக்கும்

கயல்விழிகளும் காமத்துப்பால் சொல்லும்
கட்டுடலும் கரும்பு வில்லாகி
காமன் கணைகளை நெஞ்சில் தொடுக்கும்
காமன் பண்டிகையோ நெஞ்சை வருத்தும்.

பிரம்மன் செதுக்கிய ரதியின் உருவம்
ஸ்ரீ ராமன் கண்ட சீதையின் காதல் நெஞ்சம்
சூடிக் கொடுத்த ஆண்டாளாய் வந்த உறவு
நித்தம் தாயும், தோழியும், துணைவியுமாய் நின்றே
அன்பை பொழியும் காதல் தேன் நிலவு



ஆண்டவன் தந்த அன்புத் துணையிவள்
அன்னையாய்-அருந்ததியாய், வாசுகியாய்
நின்றே என்னை வாழவைப்பவள்

காமன் விருந்தான அழகின் அட்சய பாத்திரம்
என் காதலுக்கு அருமருந்தான காம சூத்திரம்
என் கற்பிற்கு காவல் தேவதை
நாளும் பருகிக் களிக்க என் காதல் தேவதை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-08-04-2023

# பிரியமானவளே

---

இமைக்க மறந்தேன் என இமைகளே திரையாகி
உன் அழகுருவை மறைத்ததால்
விழிக்க மறந்தேன் விழிப்பே தடையாகி
இன்பக் கனவே -நீ கலைவாய் என்பதால்

உன்னை நேசிக்கும் என்னிதயம் பூவென
ஏனடி ரோஜாவே உனக்குப் புரியவில்லை
முள்ளில் நீ மலர்ந்ததாலா இல்லை-நீ கொண்ட
தேன்கள்ளின் போதையாலா?

**இமைக்க மறந்தேன்** உன் அழகை உண்டு
விழிகள் போதையுற்றதால்
***விழிக்க மறந்தேன்*** உன் கனவில் மயங்கி
இதயம் காதல் கொண்டதால்

உன் நீலவிழிகள் ஈரமானபோது
என் நெஞ்சில் குருதி வெள்ளம்
பூநெஞ்சுக்குள் சோகம் படையெடுத்தபோது
என் நெஞ்சுக்குள் ஒற்றைக் குயிலின் கானம்

விண்ணெங்கும் தேடினேன் வெண்ணிலவே உன்னைக் காணவில்லை
மண்ணெங்கும் தேடினேன் தேன் மலரே உன்னைக் காணவில்லை
கண்கலங்கி நெஞ்சம் நொருங்கிட என்னுள்ளே தேடினேன்-காதலே
என்னுள் ''நீயே'' ''**நானகி**'' **நின்றாய்**

நீருக்குள் நீந்தும் மீனாய் என் இதயம்
உன் நினைவுக்குள் நீந்துதடி
****
பூவென உன்னை என் நெஞ்சுக்குள் வைத்திருந்தேன்
பூவையே-முள்ளாய் ஏனடி என்னை வருத்துகின்றாய்

தூங்க மறந்தேன் என் நினைவாய் நீயிருந்ததனால்
விழிக்க மறந்தேன் என் கனவாய் நீ விரிந்ததனால்

பூவாசம் வீசியது காதல் பூவனமா?
பொன்வானம் பொழிந்தது காதல் தேன் மழையா?
என் மனவானில் உலா வருவது காதல் தேன் நிலவா?
என் இதயம் தேவதையின் காதல் நந்தவனமா?

மழைக்காய் ஏங்கும் பயிர்போல்-உன்
துணைக்காய் ஏங்குதடி என்னிதயம்
கொழு கொம்பின்றி அலையும் முல்லை கொடிபோல
நீயின்றி அலையுதடி என் ஆன்மா

உன் அன்பின்றி வெந்நீரில் விழுந்த
புழுவாய் துடித்து-கண்ணீரில் தவமிருக்கும்
உன் காதலன் நானடி கண்மணி

இதயம்தான் ஏங்கித் தவிக்கும், இருவிழிகள்தான்
கலங்கிச் சிவக்கும், மொழியும் விம்மலாய் வெடிக்கும்
மூச்சுக்காற்றும் பெருமூச்சாய் சலிக்கும்.
உன் காதலுக்காய் பார்வதி

கார்கூந்தல் பூச்சொல்லும், கயல் விழிகளின்
மை சொல்லும், இதழ்கள் ஊறும் தேன் சொல்லும்
கண்ணாளா என் னைப் பிரியாதே
காதல் நோயுற்றேன் உன்னாலே என்று

காமினியாள் அழகால் நிலா கண்ட அல்லிபோல்
நெஞ்சம் மகிழ்ந்து விரியும்-தேன்மொழியால்
ஒரு மொழியாள் தேனுண்ட பூந்தும்பிபோல்
இதயமும் பொங்கிமகிழும்

பூமகள் புன்னகையால் நெஞ்சில் பூமழை
குமுத வாயின் அமுதச் சுவையால்
மொழியிவே கவிதை மழை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# ரோஜா

---

ஏனடி பார்வதி என் இதயத்தை நோகடித்தாய்?
ஏனடி வான்மதி என் காதல் வானை இருளில் மூழ்கடித்தாய்?
நீயில்லாத உலகம் நிலவில்லாத வான் ஆனதே
காதலும் பொய்யானபின் என் வாழ்வு
தேனிழந்த மலராய் வாடுதே.

உன் பெயர் சொல்லாமல் ஊமையானது என் இதழ்கள்
உன் பூமுகம் காணாமல் குருடானது என் விழிகள்
உன் தேன்மொழி கேளாமல் பாலையானது செவிகள்
உன் பூவுடல் தழுவாமல் விரகதாபத்தால் எரியும் என் இதயம்

என் அன்பின் ஆழம் தெரிந்திருந்தால்
என்னை நீ மறந்திருக்கமாட்டாய்
என் இதயத்தின் சோகம் புரிந்திருந்தால் என்னைக்
காதல் சிலுவையில் அறைந்திருக்கமாட்டாய்

இதயம் சூடிய காதல் ரோஜாவே முள்ளாய் மாறியதுமேனோ?
என் உதய காலத்துப் பூபாளம் கலைந்து போனதுமேனோ?
கண்ணீர்க் கடலில் மூழ்குதடி காயமான பூ இதயம்
சோகத்தீயில் கருகுதடி காதல் நெஞ்சம்.

மெய்யென்று உன் அன்பை எண்ணி மெய்மறந்திருந்தேன்
பொய்யாகிப்போனபின் புண்ணாகிப் பிணமாகிப்போனேன்
என் இறப்பும் உன்னால் ஆனது- உயிரே
நீ நினைத்தால் என் உயிர்ப்பும் உன்னால் ஆகுமடி

காதலாகிக் கைகோர்த்து நடந்து வந்தேன்
காதல் புதை மணலில் தவிக்க விட்டாய்
-காதலாகிக் கவிதை சொன்னேன
தேவதாஸாய் துடிக்க வைத்தாய்

உனக்காய் துடிக்கும் என் இதயத்தை-
மலிவாய் நீ எடைபோட
-என் இதயம் கண்ணாடிக் கல்லானதோ?
எளிதாய் என்னைப் புறந்தள்ளி இகழ்ந்திட-மலரே
ஏழை நெஞ்சம் உனக்கு முள்ளானதோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-08-04-2023*

# சாபம்

---

காணாமல் கண்மெலிந்தேன்- வான்மதியே
கவிதை சொல்லாமல் மனம் நொந்தேன்- பூங்குயிலே
கனிமொழி கேளாமல் செவி களைத்தேன்-காதல் அஞ்சுகமே
உயிர் தழுவாமல் மெய் சோர்ந்தேன்-என் காதலியே

தேய்பிறையாய்த்- தேய்ந்து நெஞ்சம் வாடிட,
வான்மழையாய்- கண்ணீர் சிந்தி விழிகள் சோர்ந்திட,
கான மழையின்றி –கவிக்குயிலே உன் சோடிக்குயில்
தவிக்குதடி, கயிறறுந்த பட்டமாய்-காதல் மனசு
புழுதியில் அல்லாடிக் களைக்குதடி.

மறந்தவனை எண்ணித் துடிக்கும்
துஷ்யந்த-சகுந்தலையாய் மனம்,
தினம் பிரிந்தவளை எண்ணி உருகும்
சீதாராமனாய் குணம்,

சோகவனத்தில் தவமிருக்கும் மனம்
சோர்ந்தே தேவதாஸாய் உருவழியும் தினம்.
யார் கொடுத்த சாபமிது? காதல் ஈந்த வரமிது.

தனிமையில் வாடும் மனம்,
காதல் உறவுக்காய்
கண்ணீரில் தவமிருக்கும்-தினம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-04-2023

# செவ்விதழ்

நிலவில்லா வானாய் இதயம் இருண்டு கிடக்க
நீரில்லாப் பயிராய் நெஞ்சம் வாடித் தவிக்க
ஏனடி என்னை மறந்தாய்?
என் விழிகளிலோ மாரியின் ஈரம்
என் மொழிகளிலோ முகாரியின் கோரம்

செவ்விதழே செவ்விதழே ஏன் சிவந்தாய்?
முத்தமழையில் நனைந்து
காதல் சுரத்தால் கனிந்து சிவந்தாயா?

உன் முதல் முத்தத்தால் சிவந்த
என் செவ்வாயிதழ்களின் செம்மை-இன்னமும்
மாறாத மாயம்தான் என்ன?-காதலா?

கோடி முத்தங்கள் பருகியும் என் கொவ்வாயிதழ்
காயம் ஆறவில்லை-கண்ணாளா இன்னும் ஒரு முத்தம் கொடு
காதல் பித்தால் வந்த காயம் ஆறட்டும்

ஏன் சிவந்தாய் என் செவ்வாயிதழே
-இதழமுதம் பருகவரும் என்னவர்
செவ்வாயிதழ் கண்டு நாணிச் சிவந்தாயோ?

எந்நாளும் வாடாத செவ்வாயிதழ்கள்
எப்பொழுதும் தேனாயினிக்கும் கனியிதழ்கள்

காதல் நெஞ்சின் விடாய் தணிக்க கனிரசமாய்
முத்த தேனமுதைச் சுரக்கும் வற்றாத அட்சய பாத்திரமா
கன்னிமயிலே-உன் செவ்வாயிதழ்கள்?

கள்ளோ தேனமுதோ அள்ளி அள்ளி ஆசை தீரப் பருகியும்
தாகம் தீரவில்லை, காதல் போதையும் தணியவில்லை

தேவரும் அருந்தி மகிழ்ந்த அமுதோ
அன்பே உன் செவ்வாயில் ஊறுவது

இதழ்களால், இதழ் கள்ளைக் பருக
இதழ்களே-இதழ்களில் எழுதும்
காவியமா முத்தம்

உன் கொவ்வைச் செவ்விதழில் ஊறித் ததும்புவது
கள்ளோ? பூந்தேனோ? இதழ்களே-இதழ்களில்,
எழுதும் இன்பக் கவிதையோ முத்தம்

உன் செவ்வாயிதழ் தேன் சுவையால்
காலமும் மறைந்ததடி-கன்னிமயிலே
காதலும் மலர்ந்ததடி

ஆசைதீர அருந்தியும் மீண்டும் மீண்டும்
அருந்த தூண்டும் காதல் கனிரசத்தை
யார் வைத்தார்- உன் செவ்வாயிதல்களில்?

முதல் முத்தத்தால் நீ எழுதிய காதல்
இன்றும் என் இதயத்தில் தேனாய் இனிக்குதடா

வாடாத செம்பூவாய்-தேனிதழ்கள்
வற்றாத தேன் சுனையாய் முத்தங்கள்
இதழ்கள் இதழ் ‘கள்’’ சுவைத்து
இதழ்கள்ளில் இன்புறும் காதல் போதை நிலைகள்
முத்தங்களோ?

இதழ்களே-இதழ்களில் இசைமீட்கும்
அமுதகான நிலைகளோ முத்தங்கள்

செவ்வாயில் பூத்த செந்தேன் மலரை
செவ்வாயால் சூடுவது முத்தங்களோ?

கொஞ்சும் கிளியே-காதல் புறவாவே-நெஞ்சுற்ற
காதல் பிணி நீங்க அருமருந்தாய் செவ்விதழ் ஊறும்
செந்தேன் தருவாயா கொஞ்சம் தருவாயா
கொஞ்சித் தருவாயா கெஞ்சி கேட்கின்றேன்-உன் காதலன்.

செவ்வாயில் மூண்ட காதல் செந் தீ அணைக்க
செவ்விதழால் முத்தமழை பெய்யடா கண்ணாளா

இதழ்களில் இதழ்களே, இடி மின்னலின்றி பெய்யும்
இன்ப மழையோ முத்தங்கள்

வண்ண நிலவோ?. வாச மலரோ?
எண்ணமெல்லாம் நிறைந்த இன்பத் தேனோ
கன்னமெல்லாம் சிவக்க காதல் சொன்ன தேவதை

இதழ்களே, இதழ்களில் சக்கி முக்கி கற்களாய் உரசிக்கொள்ள
இதயத்தில் மூண்டதோ காதல் தீ
இதழ்களே-இதழ்களில் எழுதும் இன்பகவிதையோ முத்தம்

இதயவாசலில் இதழ்கள் போடும்
அன்பு கோலங்களோ முத்தம்

கன்னி மயிலே உள்ளம் கனிந்தது
உன்னால்-எனச் சொல்லவோ
நாணிச்சிவந்தன என் இதழ்கள்

கண்ணாளா உன் மீது காதல் வந்தது
எனச் சொல்லவோ நாணிச்சிவந்தன
என் கொவ்வை இதழ்கள்

காதல் காயத்தால் கன்றிச் சிவந்த இதழ்களுக்கு
கண்ணாளா முத்தத்தால் கட்டுப்போடு

எண்ணிச் சிவந்தனவோ நாணி மகிழ்ந்தனவோ
ஈந்த முத்தம் போதென்று,கொவ்வை செவ்வாயிதழ்கள்

செவ்விதழே-செவ்வாயிதழே ஏன் சிவந்தாய்
அன்று தந்த ஒரு முத்தம் போதென்றா
இன்று வாடிச் சிவக்கின்றாய்?

இதயவாசலில் இதழ்கள் போடும்
அன்புக் கோலங்களோ முத்தம்

கொட்டும் முத்த மழையின்றி காதல் கோடையில்
கன்றிச் சிவந்ததடா கண்ணாளா என் செவ்வாயிதழ்கள்

காதல் பிணியால் கன்றிச் சிவந்த என் செவ்வாயிதழ்கள்
காயம் ஆறிட கண்ணாளனே முத்தமழை பெய்யடா

முத்த மழையால் எனை நீராட்டு
என் காதல் பித்தம் தீரட்டும்

கன்னி மயிலே உள்ளம் கனிந்தது-உன்னால்
எனச் சொல்லவோ நாணிச்சிவந்தன உன் செவ்விதழ்கள்

கன்றிச் சிவந்த என் செவ்வாயிதழ்
காயம் ஆறிட முத்தமழை பெய்யடா

இதழ்களால் இதழ்கள் கடைந்து
'வான் அமுதெடுக்க'' வாராய் தேவதையே

கல்லில் ஏய்த்த மழைபோல் ஆனதடி காதல்
முள்ளில் விழுந்த பழந்தணிபொல் நோகுதடி நெஞ்சம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-5-04-2023*

# தேடும் விழிகள்

---

உன்னைத் தேடும் என் விழிகளில்தான்
எத்துனை காதல் ஏக்கம்

உன்னை காணாத பொழுதில்-சுடுமணலில
விழுந்த சிறுமீனாய் நெஞ்சு துடிக்கும்
காதல் தேன் சிந்தும் பூ முகத்தை என் விழிகள்
தேனீபோல் மொய்க்கத் தவிக்கும்

நெஞ்சம் காதல் விடாயுற்று-நீரோடை
தேடும் கலைமானாய்-உன்னைத் தேடி அலையும்
என் பூவிதயம் மலரப்-பண்ணிசைத்து-காதலே
உன் சுந்தரப் புன்னகையை உதய சூரியனாய்க் காட்டு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# ஊடல்

---

விழிமலரில் பூத்த கண்ணீர்த் துளியும்
தேன்மொழியில் கலந்த விம்மல் ஒலியும்
கார்குழல் உதிர்த்த வெண்மலர்களும்-மௌனித்த
மெட்டி வளையல் ஓசையும், வேதனை சொல்ல
ஊடலால் வாடி நின்ற தேவதை

நெஞ்சம் கலங்கியவன் மெல்லிடையில் கைவைத்து
மேகலையைச் சரிசெய்து கட்டியணைத்து
கண்மலர் பூத்த வெண்முத்தை கையால் மெல்லத் துடைத்து
கார் குழல் சிந்திய பூக்களுக்கு தேன்மலர்களால் ஈடுகட்டி
கனிமொழியால் விம்மல் தணிக்க கனியிதழை முத்தமிட்டு
காதலியாள் சித்தம் குளிர்வித்தான்

எண்ணமெல்லாம் நீயாகி-என் இதயமும் உனதாகி
வண்ணப் பூச்சொரியும் வனமாய் உள்ளம் கூத்தாட
என்வாழ்வில்-காதல் தேன்நிலவாய் உலாவரும் தேவதையே
இறைவன் ஈந்த காதல் கொடை நீதானடி.

அஞ்சுகமே, காதல் கள்வடியும் பூவனமே
உன் காதல் தேன் தும்பி நானடி
என்றும் என் காதல் கோயிலில் வாழும்
காதல் தேவதையும் நீதானடி

ஊடலும் மறைய-கூடலால் இன்பம் பொங்க
கொஞ்சிக் களித்த காதல் அஞ்சுகங்கள்
சோடிக் குயில்களாய் கானம் பாடும்
காதல் கோகிலங்கள்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-6-04-2023

# வலி

காதல் சூரியனே –
உன் கண்பட்டால் பூக்கும்
காதல் பூவடி என்னிதயம்

கண்வழி நுழைந்து நெஞ்சினில் விழுந்த
காதல் தேன்துளியே
நீ பார்த்தபோது பூத்த இதயம்
நீ பாரதபோது வாடியதுமேனோ?

கண்ணிலும் இனிக்கும்-கருத்திலும் இனிக்கும்
காதல் தேன் நிலவே-உன்னை
என் இருவிழிகளிலும் எழுதிவைத்தேன்
என்னை அழவைத்தாய்

உயிர்மூச்சினில் உலவவிட்டேன் -பெருமூச்சாய்
மாற்றி விட்டாய்-இதயத்தில்
குடிவைத்தேன் என்னைத் துடிக்கவிட்டாய்
உயிரில் கலந்துவிட்டேன்- ஏனடி?
என்னை மடியவிட்டாய்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-08-04-2023*

# வள்ளல்

காதல் சுரத்தில்-கலாபமயில் வாடியபோது
பேகன் நானே காதல் போர்வையானேன்
கொழு கொம்பின்றி வாச முல்லை
வழியோரம் கிடந்தபோது-பாரி நானே
காதல் கொடி படர்ந்திடத் தேரானேன்

காதல் கவியும் ஊடலால் உடல் மெலிந்தபோது
அதியமான் நானே
அதிசய நெல்லிக் கனியானேன்.

கூடி வாழ்தலின் கொண்டாட்டத்தில்
குலமகளும் என்னைத் தன் மடியில்
கொஞ்சியபோது கொண்டவன் நானே
குழந்தையானேன்.

நேசத்தால் நெஞ்சமும் சொர்க்கமாய் மாறும்
பேச்சும் காதலால் கவிதையாய் கொட்டும்
இதயமும் இறக்கை முளைத்து எழுந்து பறந்தே
வான் முகட்டைத் தட்டும்

அவள் பிரிவால் விழிகளில் நயகரா முட்டும்
இதயமும் தனிமையில் பாலையாகி
அன்பு மழைக்காய் ஏங்கும்.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-08-04-2023*

# வான் மதி

---

எட்டாத வானின்று-ஏழை
என் இதயத்தை தொட்டவளோ தேவதை
கிட்டாத என் காதல் கனவு நனவாகிட
காதல் கீதை மொழிந்தவளோ காளிதாஸன் சகுந்தலை
இருண்ட என் வான் ஒளிர்ந்திட உலா வரும்
காதல் பௌர்ணமியோ-மிதிலையின் மைதிலி

செந்தேன் ஊறும் இதழ்களால்
என் சிந்தையை உயிர்ப்பித்தாய்
பூந்தேகம் வீசும் வாசத்தால்-என்னிலும்
உன் பூவாசம் வீசச்செய்தாய்

உயிர்காற்றாய் என் உள்ளோடும் குருதியில் கலந்தவளே
காதல் வானில் எழுந்து பறந்திட இறக்கைகள் தந்தாய்
கவியரங்கில் குயிலாய்ப் பாடிட
காதல் உறவு தந்தாய்

மழையும் மண்ணும் கலந்ததுபோல் நெஞ்சம் கலந்திட
பூவும் தேனும் இணைந்ததுபோல் கூடிக் களித்திட
காதல் தந்தவளே என் காதல் பூங்குயிலே
வானுரும் நிலவும், தேனூரும் மலர்களும் சாட்சியாக
என் இதயம் ஒருபோதும் உன்னை மறவாது

என்னை மறந்தபோது கண்டுகொண்டேன்
என்னுள் நீயிருப்பதை-நானே நீயாகிப்போனதை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# வண்ணக் கோலம்

---

கனவெனக் காண்பதும்ம்-கண்ணே உன்னைத்தான்
காதல் உறவெனக் கொண்டதும்-பெண்ணே உன்னைத்தான்-
என் விண்மீன் வானத்து வெண்ணிலா எனக்
கவிபாடியதும் காதலே உன்னைத்தான்

ஏகாந்தத்திலும் தேனாய் இனிப்பதும்-
உன் காதல் எண்ணந்தான்
உனக்காய் துடிப்பதும்-என் இதயம்தான்
வண்ணம் மாறா வானவில்லாய்-நெஞ்சுக்குள்
எப்போதும் உன் அழகுக் கோலம்தான்.

வான் நீலமும் ஒரு பகற்பொழுது
வையகத்தை மூடும்-காரிருளும் ஒரு இராப்பொழுது
தேன் மலர்களின் வாழ்வும் ஒரு நாள்பொழுது-
கவிதையுறவாய் நெஞ்சில் வாழும் காதலே
என் நெஞ்சுக்குள் முப்பொழுதும் நீயடி.
எப்பொழுதும் எனக்கோ உன் நினைவடி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# யார் இந்த தேவதை?



புன்னகை பூச்சொரியும் பூவையிவள் யாரோ?
"கண்" நகையை அணிந்த கயல்விழியோ கண்ணகியோ?
முத்துப்பல்வரிசை தெரிய மோகினியாய்ச் சிரிக்கின்றாள்
கத்தும் கடலேழும்-காதல் எனச் சொல்லி எழக்-காளையிவன்
நெஞ்சுக்குள் கடலலைபோல் பொங்குகின்றாள்

கருவானில் உலா வரும் வெண்ணிலவோ
என் இதய வானில் உலாவரும் தேன் நிலவு.

கண்களால் காதல் சொன்னேன்-மலர்விழிகளிலோ
பூவனம், குழலினால் காதல் சொன்னேன்-
யாழினியின் பூ இதயத்திலோ இசைக்கோலம்
கவிதையால் காதல் சொன்னேன்
கவிக்குயிலின் நெஞ்சினிலோ காதல் பூபாளம்

வண்ணங்களால் காதல் சொன்னேன்
பொற்சித்திரமோ நாணக்கோலம்
பூக்களால் காதல் சொன்னேன் பூவிழிகளிலோ
தேன்மழை, கண்ணீரால் காதல் சொன்னேன்
கரைந்தே இதயத்தைத் ஈந்த காதலி நெஞ்சிலே பூ மழை

நெஞ்சை கொள்ளை கொள்ளும் சிரிப்பில் உள்ளம்
குளிரும், கோடிப்பூக்கள் காதல் தேன் சொரியும்
வஞ்சிமகள் கொஞ்சும் மொழிகளிலோ
காதல் அஞ்சுகங்கள் குலவும்

பஞ்சில் விழுந்த தீயென-நெஞ்சம் காதல் நெருப்பில் எரியும்
குவிந்தபவள இதழ்களும் கொஞ்சிக்கொள் என அழைக்கும்
மோகன புன்னகையில் தேன் மழை பொழியும்-
அலை அலையாய் புரளும் அடர்ந்த கார் கூந்தலும் அள்ளிக்கொள்,
ஒரு பூவனமாய் எனை சூடிக்கொள் நாணத்தோடு அழைக்கும்

பூவிழிகளின் தழுவலில் தேன்மழை பொழியும்
ஆண் மனதில் ஆயிரம் கனவுகள் பூவனமாய் மலரும்,
தேவதையாள் நிலாமுகம் இதயவானில் நித்தம் உலாவரும்
ஒரு புன்னகையில் கோடி பொன்நகைகள் தந்தவள்
என் மனதில் ஆயிரம் கவிதைகள் ஈந்தவள் யாரோ?

கண்களால் காதல் சொன்னேன்,
கயல் விழிகளிலோ வெட்கச் சிவப்பு
கவிதையால் காதல் சொன்னேன்
நெஞ்சினிலோ புள்ளி குயிலின் உயிர்ப்பு

வாசமலர்களால் காதல் சொன்னேன்
பூ நெஞ்சினிலோ காதல் தேனின் உயிர்ப்பு
குழலினால் காதல் சொன்னேன்
கோதையின் நெஞ்சினிலோ ராதையின்-தவிப்பு

சூடிக்கொடுத்த ஆண்டாளாய் என்னைச்
சூடிக் கொண்ட பாவை
ஆடிக் களிக்கும் தோகையாய்-நெஞ்சில்
காதல் பரதம் ஆடும் பூவை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-20-1-2024

# யார், யார் யாரிவள் ?

---

வெள்ளைச் சுடிதாரில் வந்த மோகினியோ-இவள்?
இளநெஞ்சை கொள்ளையிட்ட காமினியோ?
என் நெஞ்சில் காதல் சதிராடும் காவிரி மாதவியோ?
காதல் நெருப்பால் கவி நெஞ்சை வாட்டும் ஊர்வசியோ?

ஒரு பார்வையால் என்னை மயக்கிய மைதிலியோ?
புன்னகையால் புவியாளும் எனை வீழ்திய
காளிதாஸன் சகுந்தலையோ? யாரிவள்?

இட்ட அடி நோக எடுத்த அடி சிவக்க-நெஞ்சைத்
தொட்ட விழிகளோ காமன் கணை
பட்ட மனம் துளிர்க்கப் பார்வையிலோ காதல் மழை
எட்டுத் திசையும் காதல் ஒலிக்க-காளை
என் மனதிலோ பூமழை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-04-2023

# யாரிவள்

---

விழிகளோ இவை, இல்லை-என்னை
விழுங்கிடும் காமன் கயல்களோ?
அதரங்களோ இவை-மலர்ந்த முத்தப்பூக்களின்
புத்தம் புது தேன் கிண்ணங்களோ?

புருவங்களா இவை என்னை வாட்டிடும் காதற்
பருவங்களோ? கார் கூந்தலோ இவை இல்லை
என்னை கட்டிப்போடத் துடிக்கும்
காதல் இழைகளோ?

கன்னங்களோ இவை கடித்துச் சுவை
எனச் சொல்லும் தேன்கனிகளோ?
கண்ணகளில் தெரிவது காந்தப் புலமா?- இல்லை
நெஞ்சை கவ்வியிழுக்கும் காதல் புலமே?

மோகனமோ பிரமன் வடித்த பொற்சிலையோ?
என்னை ஆட்டிப்படைக்கும் காதல் நர்த்தகி?
காஞ்சிப் பல்லவன் சிவகாமியோ?
காதலாகிக் களிநடனம் புரியும் தேவதையோ?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023

# யாரிவள்-தேவதை

---

விழிகள்தான் தேன் சிட்டாய் மலர் முகத்தை மொய்க்கும்
மொழிகள்தான் காதலை மௌனராகத்தில் இசைக்கும்
இதயம்தான் காதல் மந்திரமாய் அவள் பெயர் சொல்லித் துடிக்கும்
சுவாசம்தான் அவள் மேனி வாசத்தால் காதலாகி மணக்கும்

இரவும்தான் அவள் நினைவுகளால்
கனவுப் பூக்களால் நிறையும்
உறவும்தான் காதலாகி கனிந்தே
தேனாய் இனிக்கும்.

கண்களைக் கவர்ந்தது மோகனமா?
செவிகளில் இனித்தது தேவகானமா?
சுவாசத்தை நிறைத்தது பூவனமா?-

மேனி வண்ணம் சந்தனமா?
இதழ்கள் இரண்டும் தேன் கிண்ணமா?
நாணம் அணிந்த தேவதையா?
விழிகள் காதல் அலை வீசும் சாகரமா?
என்னை கனவிலும் வருத்திடும்-
பூ மகள் தேவதையா?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-08-04-2023